சொல்லாம் பரத்தலிற் [1]பிங்கல முதலா
நல்லோ [2]ருரிச்சொலி னயந்தனர் கொளலே.

என், இவ்வோத்திற்கு உரியதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) இவ்வெழுத்து இவ்விடத்து இவ்வாருகும், இப்பதம் இவ்விடத்து இவ்வாருகும், இச்சொல் இவ்விடத்து இவ்வாருகுமென்று இலக்கணஞ்சொல்லுநூலுள் உலகிலுள்ள பொருள்கட்கும் குணங்கட்கும் இன்னதற்கு இன்னதுபெயரென்று தனித்தனியே சொல்லலுற்றால் எல்லைத்துமை பெருகுதலின், ஈண்டுச் சொல்லாதொழிந்தாம்; அவை பிங்கலமுதலான புலவர்களாற் சொல்லப்பட்ட உரிச்சொற்பனுவல்களுள் விரும்பி அறிந்து கொள்க எ - று.

அஃதேல், இச்சொல் இவ்வொருபொருட்குரித்து, இச்சொற் பல பொருட்குரித்தென்று சொல்லல் சொல்லிலக்கணமாகலின், ஈண்டுச் சொல்லாதொழிதல் குன்றக்கூறலென்னுங் குற்றமாம் பிறவெனின், ஆகாது; என்னை? பொருளாவன இவை, குணமாவன இவையென்றும் இவற்றைப்பற்றி இவ்வாறு வரும் சொற்களென்றும் பெயரோத்தினுள்ளும் ஈண்டும் இவற்றின் இலக்கணமெல்லாம் சொல்லுதலானும் முடிவிடங் கூறலானும் அவற்றையும் வேறே ஒரு நூலாகவே முன்னோர் சொல்லுதலானும், வடமொழி முதலான பிற கலைக்கடல்களுள்ளும் வேறே சொல்லுதலானு மென்க.

இது முடிவிடங்கூறல் என்னும் தந்திரவுத்தியாம்.

(பி - ம்.) [1] பிங்கலர்முதலா [2] உரிச்சொலுள் (கக)

(460) சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென வுணர்த [1]றெள்ளியோர் திறனே.

என், இவ்வதிகாரத்துட்சொன்ன பொருட்பகுதிகட்கெல்லாம் ஆவதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) சொற்களையெல்லாம் தனித்தனியே எடுத்து இஃது இன்ன சொல் இவ்வாறும், இச்சொல் இப்பொருட்டென்று [2]சொல்லப்புகின் வரம்பின்மையாமாதலின், ஈண்டுச் சொன்னவற்றுடனே சொல்லாதவற்றையும் ஒப்பித்துக்கொண்டு விளங்க அறிதல் உணர்வுடையோர்க்கு வழக்காவது எ - று.

இஃது என்சொன்னவாறோவெனின், இவ்வதிகாரத்துட் சொன்ன ஒருமொழியே தொடர்மொழியே பொதுமொழியே திணையே பாலே இடனே வழக்கே செய்யுளே வெளிப்படைநிலையே குறிப்புநிலையே பெயரே வேற்றுமையே வினையே தொகைநிலையே பொருண்மயக்கே தொகாநிலையே வழுவே வழுவமைப்பே காலமே வினாவே செப்பே மரபே இயற்கையே செயற்கையே பொருள்கோளே இடைச்சொல்லே உயிர்ப்பொருளே உயி

ரில்பொருளே அவற்றின்பண்பே உரிச்சொல்லேயென்றிவற்றுட் சொல்லா தொழிந்தன உளவாகிலும் அவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாகக் கொண்டு செலுத்துகவென்று குற்றம்வாராமல் நூலைப் பாதுகாத்தவாறெனக்கொள்க.

(பி - ம்.) [1] றெளிவோர் திறனே [2] சொல்லின் (உ0)

(461) பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

எ - ன், இந்நூலிற்சொன்ன ஐந்ததிகாரத்திற்கும் சிங்கநோக்காய் நிற்பதொரு புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) முற்காலத்துள்ளன சில விடுதலும் இக்காலத்துச் சில வருதலும் காலக்கூறுபாட்டினானே குன்றக்கூறல் மிகைபடக் கூறலென் னும் குற்றமாகா எ - று.

அவை ...அழன், புழன், "கேட்டையென்று நின்றையென்று,........ கண்டை யென்று" (தொல். எச்ச. 30) என்றற்றொடக்கத்தன அக்காலத் துள; இக்காலத்து வழங்கா. அங்ஙனம இங்ஙனம் உங்ஙனம் எங்ஙனம் என்புழி ஙவ்வும், சம்பு சளி சரடு சரி சமழ்ப்பு சள்ளை என்புழிச் சகரமும் இக்காலத்து ஈண்டு மொழிக்கு முதலாயினவென்க. பிறவுமன்ன.

இவ்வாறே மேல்வரும் அதிகாரங்களிலும் கண்டுகொள்க. (உக)

## ஐந்தாவது உரிச்சொல்லியல் முற்றிற்று.

---

### கட்டளைக்கலித்துறை

இருதிணை மூவிட நான்மொழி யைம்பா லறுதொகையேழ்
அருவழு வெட்டுரு பொன்பான் றொகாநிலை யாய்ந்தவெச்சம்
ஒருபது கோளெட்டு முப்பொழு தீரிட மோரியல்பாய்
வருமொழி மூன்று முணரச்சொல் வண்மை வருந்திருவே.

### வெண்பா

பேரறு பத்திரண்டு பின்வினையெண் ணான்குபொது
ஓரறுபத் [1]தெட்டிடை மூவேழின் - மேலொன்
றுரியிருபத் தொன்றுகச் சொற்சூத் திரத்தின்
விரி[2]யிருநூற் றேரைந்தா வேண்டு.

(பி - ம்.) [1] தெட்டிடையின் [2] யிருநூற்றீரிரண்டா

## இரண்டாவது சொல்லதிகாரம் முற்றிற்று.

---

சொல்லும் பொருளுமெனத் தோன்றித்தோன் றுத்துணையை
அல்லும் பகலு மடை.

---

# சூத்திர முதற்குறிப்பகராதி

( எண் - சூத்திர எண் )

## விளங்காமேற்கோள் முதற்குறிப்பகராதி

### (எண் - சூத்திர எண்)

---

# அரும்பத முதலியவற்றின் அகராதி

## எண்—சூத்திர எண்

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 23 | மிகைப்பட | மிகைபட |
| 13 | 13 | களைக்கோட்டு | கலைக்கோட்டு |
| 14 | 15 | இடங்களின்றன்னை | இடங்களிற்றன்னை |
| ,, | ,, | பனனிபாரம் | பன்னிபாரம் |
| 30 | 6 | விரியான | விரியான் |
| 31 | 12 | தனிநிலை | தனிநிலைமுதனிலை |
| 36 | 12 | வைத்து | வைத்தது |
| ,, | 20 | யிடைமீ | யிடையீ |
| ,, | 29 | ஞக்க் | ஞங்க் |
| ,, | 43 | ஞம்ழு | ஞம்மு |
| 38 | 30 | யென்னும் | யென்றும் |
| ,, | 31 | லென்னும் | லென்றும் |
| 39 | 2 | வாகையால் | வகையால் |
| 40 | 11 | றில்லையோ | றில்லையாலோ |
| 43 | 11 | ஐ ஒள | ஐ ஔ |
| 49 | 24 | றுயிர்மெப் | றுயிர்மெய் |
| 61 | 23 | பிறிதொரு | பிறிதொடு |
| 62 | 18 | (சீவக. 2790) | |
| ,, | 19 | கோகவரைமார்பா | " கோலவரைமார்பா " (சீவக. 2790) |
| ,, | 28 | இருப்பது | இருபஃது |
| 63 | 12 | வீழருவி | மலைவீழருவி |
| 64 | 3 | எளியங்காய் | புளியங்காய் |
| 67 | 14 | இவ்விற்று | இவ்வீற்று |
| 78 | 27 | மூன்னும் | முன்னும் |
| 83 | 23 | ஓகாரத்துடனே | ஒகாரத்துடனே |
| 98 | 7 | னாயின | ளாயின |
| 103 | 2 | வினியீருக | விளியீருக |
| 107 | 28 | கோனை | கோளை |
| 112 | 12 | ரீரிரண்டாகும் | மீரிரண்டாகும் |
| 124 | 16 | [15]ருறகற்றி | ருறகற்றி |
| ,, | ,, | றிரு | [15]றிரு |
| 125 | 22 | கமைந்தா | கமைந்தார் |
| 144 | 9 | ஒழுங்கு | ஒருங்கு |
| 147 | 31 | விற்றிருந்த | வீற்றிருந்த |
| ,, | 33 | விதியோ | விழியோ |
| ,, | 36 | றவத்தோடு | றவத்தொடு |
| ,, | 37 | என ஒடு | என ஒடு ஒடு |
| 154 | 32 | ரறழித் | ரறழிங் |
| 162 | 22 | நிச்சமாய் | எச்சமாய் |
| 174 | 36 | கணையுருள் | கணையிருள் |
| 179 | 17 | முள்வான் | முள்ளாள் |
| 184 | 25 | அழங்கிழை | அணங்கிழை |
| 215 | 17 | தன்னு | தன்னை |